12378

OL/2021(2022)/51/T-I, II





**51 | T | I, II**

**அධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)**
**கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)**
**General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)**

නාට්‍ය හා රංග කලාව I, II
**நாடகமும் அரங்கியலும் I, II**
Drama and Theatre I, II

පැය තුනයි
*மூன்று மணித்தியாலம்*
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவு செய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## நாடகமும் அரங்கியலும் I

**அறிவுறுத்தல்கள் :**

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
* **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
* **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (X) இடுக.**
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** கதையும் காட்சியும் பொருத்தமாக இணைப்பாக்கம் செய்யப்படுவதில் படைப்பின் வெற்றி தங்கியுள்ளதாகக் கருதப்படுவது
(1) வானொலி நாடகம் (2) மேடை நாடகம்
(3) இசைக்கச்சேரி (4) தொலைக்காட்சி நாடகம்

**2.** உயிர்த்துடிப்புள்ள மனிதனைப் பிரதான வெளிப்பாட்டு ஊடகமாகக் கொண்ட கலைகள் மட்டும் உள்ளடக்கப்பட்டுள்ள தொகுதி
(1) இசை, நடனம், செதுக்கல் (2) சிற்பம், சித்திரம், கட்டடம்
(3) இசை, வில்லுப்பாட்டு, நாடகம் (4) நாடகம், நடனம், கைவினை

**3.** பின்வருவனவற்றுள் நாடகத்தின் சிறப்பியல்புகள் தொடர்பான **பொருத்தமற்ற** கூற்று யாது?
(1) நால்வகைச் சித்திரிப்புகளின் ஊடாக வெளிப்படுத்தப்படுவது
(2) பார்ப்போரின் பதிற்குறித் தாக்கத்திற்குட்படாதது
(3) ஆற்றுவோர் - பார்ப்போர் இடையில் நேரடித் தொடர்பைக் கொண்டது
(4) சூழமைவுகள் மூலம் சித்திரிக்கப்படுவது

**4.** பின்வருவனவற்றுள் மனதை ஒருநிலைப்படுத்தல், கருத்தூன்றல் மற்றும் கிரகித்தல் என்பனவற்றுக்கு அதிக முக்கியத்துவமளிக்கும் அரங்க விளையாட்டாக அமைவது
(1) தலைவரைக் கண்டுபிடித்தல் (2) ஆடும் வீடும்
(3) கோழி கோட்டான் (4) கரடியும் கிராம மக்களும்

**5.** பாத்திரம், நிகழ்ச்சி, பொருள்கள், சூழமைவு என்பவற்றை முன்தயார்ப்படுத்தலின்றிச் சித்திரித்தலைக் குறிப்பது
(1) போலச்செய்தல் (2) புதிதளித்தல்
(3) பாத்திரச் சித்திரிப்பு (4) ஆள்மேற்கொள்ளல்

**6.** சிறுகதை இலக்கியத்தில் காணப்படும் பண்பு **அல்லாதது**
(1) கதை பெரும்பாலும் படர்க்கை நிலையில் கூறப்படும்.
(2) பெரும்பாலும் பாத்திர நகர்வுகள், செயல்கள் கதாசிரியரால் கூறப்படும்.
(3) காட்சிச் சூழல் உயிரோட்டமான முறையில் நேரடியாகக் காட்சிப்படுத்தப்படும்.
(4) வாசகர் மனவெளியில் காட்சிப்படிமம் உருவாக்கப்பெறும்.

[பக். 2 ஐப் பார்க்க

**19.** நடிபாகமளித்தல், செலவுகளைப் பொறுப்பேற்றல், மேடைக்காட்சிகளை ஒழுங்குபடுத்தல் எனும் செயற்பாடுகளுக்குப் பொறுப்பு வகிப்போர் முறையே
(1) தயாரிப்பாளர், நெறியாளர், நாடகாசிரியர்
(2) நெறியாளர், தயாரிப்பாளர், நாடகாசிரியர்
(3) தயாரிப்பாளர், நெறியாளர், மேடை முகாமையாளர்
(4) நெறியாளர், தயாரிப்பாளர், மேடை முகாமையாளர்

**20.** ஆரோடு நோகேன் நாடகத்தில் இடம்பெறும் மேல்வரும் உரையாடல் பகுதியைக் கருதுக.
A :- அம்மா கூப்பிட்டது கேக்க இல்லையே?
B :- என்னம்மா?
C :- அரை மணித்தியாலமா உங்கை என்ன செய்யிறாய்?
B :- தலையிழுக்கிறன்.
C :- மணித்தியாலக் கணக்காயோ?
மேற்படி உரையாடலில் A, B, C எனக் குறிப்பிடப்பட்டுள்ள பாத்திரங்கள் முறையே
(1) ஆரணி, அம்பிகை, சரோஜினி (2) அம்பிகை, ஆரணி, சரோஜினி
(3) ஷீலா, அம்பிகை, ஆரணி (4) ஆரணி, அம்பிகை, செல்வராணி

**21.** நாடக எழுத்துரு ஒன்றில் சம்பவங்கள் தொடராக ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்து இணைக்கப்படுவது எப்பெயரால் அழைக்கப்படும்?
(1) கரு (2) கதைப்பின்னல் (3) மோடி (4) மோதுகை

**22.** பின்வருவனவற்றுள் யதார்த்த மோடிக்குரிய நாடகமாகக் கருதப்பட **முடியாதது**
(1) உறவுகள் (2) உடையார் மிடுக்கு (3) கந்தன் கருணை (4) சுந்தரம் எங்கே

**23.** நாடகத் தயாரிப்பின்போது நடிகர் நடமாடும் பௌதிகச் சூழலை நிலைநிறுத்துவதற்குத் துணைபுரியும் அரங்கக் காண்பியமாக அமைவது
(1) காட்சிவிதானிப்பு (2) இசை (3) வேட உடை (4) ஒப்பனை

**24.** நாடகச் சூழமைவினை செவிவழியாகப் புரிந்து கொள்வதற்கு பார்ப்போனுக்குத் துணைபுரியும் அரங்கத் துணைக்கலை
(1) நடனம் (2) ஓவியம் (3) இசை (4) ஒளி

**25.** 'ஆரொடு நோகேன்' நாடகத்தின் பிரதான இலக்குப் பார்ப்போராக அமையக்கூடியோர் யாவர்?
(1) அதிபர்களும் ஆசிரியர்களும்
(2) சிறுவர்களும் அவர்களது பெற்றோரும்
(3) அரசியல்வாதிகளும் சமூக சேவையாளர்களும்
(4) கட்டிளமைப் பருவத்தினரும் அவர்களது பெற்றோரும்

**26.** நாடகத்தின் காலம், சூழல் போன்றவற்றை வெளிப்படுத்தும் கட்புல மூலகமாக அமைவது
(1) ஒலி (2) ஒளி (3) இசை (4) சொல்லாடல்

**27.** ஆற்றுவோனது உணர்வுச் சூழலுள் பார்ப்போன் உள்ளீர்க்கப்பட்டிருக்கும் ஒத்த உணர்வு நிலையைப் பரதர் எவ்வாறு குறிப்பிடுகிறார்?
(1) கதாசிஸ் (2) யூஜென் (3) சுவை (4) சஹிர்தய

**28.** நாடகத்தில் காட்சி மாற்ற நேரத்தைக் கணக்கிட்டு நேரக்குறிப்பின் அடிப்படையில் தயாரிக்கப்படும் ஒளி நினைவுக்குறிப்பு
(1) செயற்பாட்டுக்குறிப்பு (2) வரிக்குறிப்பு (3) வரவுக்குறிப்பு (4) நேரக்குறிப்பு

**29.** பின்வருவனவற்றுள் வாழ்வை மிக ஒத்ததன்மையுடைய யதார்த்தப் பாங்கிலான வேட உடைகளை அதிகளவில் பயன்படுத்தக்கூடிய நாடகமாக அமைவது
(1) எந்தையும் தாயும் (2) பொய்க்கால்
(3) நம்மைப் பிடித்த பிசாசுகள் (4) இராவணேசன்

**30.** கூத்தின் தனித்துவமான பண்பு **அல்லாதது**
(1) சுற்றிவர பார்ப்போரைக் கொண்டிருக்கும்.
(2) ஆடல் பாடலூடாகக் கதை சொல்லப்படும்.
(3) எடுத்துரைக்கும் பண்புடனான அளிக்கைத்தன்மை உடையது.
(4) வாழ்வை ஒத்ததான யதார்த்தபூர்வமான காட்சிவிதானிப்பைக் கொண்டிருக்கும்.

[பக். 4 ஐப் பார்க்க

**39.** இப்படத்தில் காட்டப்பட்டுள்ள கிறிஸ்தவ சமயம் சார்ந்த சடங்கு



(1) குளுர்த்தி
(2) பாஸ்க்கா
(3) வாசாப்பு
(4) வேட்டைத் திருவிழா

**40.** படத்தில் காட்டப்பட்டுள்ள, 'கின்னரய' என அழைக்கப்படும் பாய் இழைக்கும் சமூகத்தினரால் ஆற்றப்படும் சிங்கள நாட்டார் ஆற்றுகை வடிவம் யாது?



(1) கோலம
(2) சொக்கறி
(3) நாடகம
(4) நூர்த்தி

* *

**5.** (i) பின்வரும் அரங்க அசைவுகள் ஒவ்வொன்றினாலும் கருதப்படுவது யாதெனக் குறிப்பிடுக.

(அ) இயல்பான அசைவு

(ஆ) ஆக்கியல் அசைவு

(இ) தாளத்திற்கு அமைவான அசைவு (03 புள்ளிகள்)

(ii) நடிகர் ஒருவர் அரங்க விளையாட்டில் ஈடுபடுவதன் மூலம் பெற்றுக்கொள்ளக்கூடிய திறன்கள் **நான்கினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) 'சூழலியற் பிரச்சினை' ஒன்றை அடிப்படையாகக் கொண்டு **ஐந்து** நிமிடத்திற்குரிய நாடக எழுத்துரு ஒன்றை எழுதுக. (05 புள்ளிகள்)

**6.** (i) புதியதொரு வீடு நாடகம் எந்த வகை மோடிக்குள் அடங்கும்? (02 புள்ளிகள்)

(ii) புதியதொரு வீடு நாடகத்தில் வரும் ஏதாவது ஒரு பாத்திரத்தைத் தெரிவுசெய்து, அதன் இயல்புகள் **நான்கினைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) ஆறொடு நோகேன் நாடகத்தில் வரும் பிரதான கருவினைக் குறிப்பிட்டு, அக்கரு எவ்வாறு பாத்திரங்களினூடாகச் சித்திரிக்கப்படுகிறது என்பதை விளக்குக. (06 புள்ளிகள்)

**7.** பின்வருவனவற்றுள் எவையேனும் **மூன்றிற்குச்** சிறுகுறிப்பு எழுதுக.

(i) பறை மேளக்கூத்து

(ii) ரட்டயக்கும

(iii) சூரன்போர்

(iv) பாஸ்கா

(v) பாண்டவர் வனவாசம்

(04 × 03 = 12 புள்ளிகள்)

* * *

